# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - சித்திரை - 2018 - ஏப்ரல்

70



ரிஷிகேஷில் வேதாந்த மாணவர்களுடன் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி – சித்திரை – 2018 – ஏப்ரல் இதழ் – 70

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

விண்ணவர்கள் அடிபணிய வீற்றிருக்கும் பெருமானை
வேதங்கள் தானறிய இயலா தானை
வேழமுகன் தந்தையினை வேள்வி செய்து
மண்ணுள்ளார் மதிக்கநின்ற மறையோன் அண்ணா
மலையானை மன்றில்நடம் ஆடுகின்ற
மருந்தாகி நமக்குதவி மகிழ்வான் மூன்று
கண்ணாகி அருள்செய்யும் கருத்தாகி இருப்பானைக்
கருவருவர் இசைகேட்கும் கயிலை யானைக்
காலனையே கூற்றுதைத்த கச்சி யானைப்
பண்ணான திருமுறைகள் பரவிடவே தானுவக்கும்
பரமனையே தான்மணந்த நெல்லை தன்னைப்
பணிய அருள் பாலிப்பான் நன்மை தானே!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

தேர்வுகள் முடிந்து வெற்றி பெற்று ஆனந்தமாக வெளியேறும் அனைத்து மாணவர்களுக்கும் நம் பாராட்டுகளும் ஆசிர்வாதங்களும். கல்வி என்னும் ஆலமரத்தின் விழுதுகளாக வளர்ந்து ஆலமரத்திற்கு வலுப்பெறும் உறுப்புகளாக உயர்ந்து நிற்கும் மாணவர்களே! உங்கள் அனைவருக்கும் வாழ்க்கையிலே ஒரு நல்ல குறிக்கோளோடு பணி செய்து உயர்ந்து உங்களுக்கும் உங்கள் குடும்பத்தார்கள், உறவினர்கள், சமுதாயம் அனைத்திற்கும் தொண்டாற்றும் நல்ல குடிமகனாகவும் நல்ல பிள்ளையாகவும் தொண்டனாகவும் வளர வேண்டும் என்று விரும்புகிறோம். உயர்ந்த லட்சியம், சிறந்த குறிக்கோள் இவை இல்லாத வளர்ச்சி வாழ்க்கை யாருக்கும் பயனற்றதாகக் கழிந்துவிடும். ஒழுக்கமும் பணிவும் கொண்டு சமுதாயத்திலே ஓர் அங்கமாக முளைக்கின்ற காலத்திலே ஆரம்பக்கால இடர்கள் அனேகம் தோன்றலாம். அந்தத் தருணங்களிலே மனத்தெளிவோடு சற்றும் தளராமல் கொண்ட குறிக்கோளை நோக்கி முயற்சிகளைக் கையாளுவது தன்னம்பிக்கையை அதிகப்படுத்தி நம்முடைய முன்னேற்றத்தை விரைவு செய்ய முடியும். எக்காரணம் கொண்டும் எக்காலத்திலும் தன்னம்பிக்கையை இழந்து தாழ்வு மனப்பான்மை என்னும் குழியிலே விழுந்து விடாமல் எழுந்து மீள்வது கடினமான செயலாகிவிடும். எனவே தன்னம்பிக்கை என்ற பக்குவத்தை விடாமல் கடைப்பிடித்து வந்து மனத்தெளிவோடு பணிகளைச் செய்தால் திண்ணமாக வாழ்வில் முன்னேற்றம் ஏற்படும்.

தன்னால் முடியும் என்பது தன்னம்பிக்கை; தன்னால் மட்டுமே முடியும் என்ற உணர்வு அகம்பாவம். இரண்டிற்கும் உள்ள இடைவெளி

மிகச் சிறியது. அதனாலே முன்னேறும் பருவத்திலே மனத்தளர்ச்சி ஏற்படவும் விடக்கூடாது; மனதில் அகங்காரம் ஏற்படவும் விடக்கூடாது. தன்னம்பிக்கையோடு செயல்பட்டால் வெற்றி நிச்சயம். வாழ்க்கையில் எவ்வளவு உயர்ந்து இருந்தாலும் அகம்பாவத்தை அண்டவிடாமல் பணிவோடு பணி செய்வதே நம்முடைய வெற்றிக்குக் காரணமாகும். நம்முடைய முன்னோர்கள் சொல்லி வைத்த நல்ல நூல் கருத்துக்களையும் மனதார ஐயம்திரிபறக் கற்றுத்தெளிந்து கடைப்பிடித்து வந்தால் வெற்றி இயல்பாகக் கிட்டும். எனவே நல்ல மகனாக, தந்தையாக, குடிமகனாக வாழ்ந்து உயர வேண்டும் என்றால் ஒழுக்கம், பழக்கவழக்கங்களில் தவறின்மை, தன்னம்பிக்கை, அடுத்தவர்க்கு உதவுகின்ற இரக்கம், அடுத்தவரை மதிக்கின்ற பணிவு, இடைவிடாத முயற்சி ஆகிய பண்புகளாலே நாம் வெற்றி உச்சத்தை அடைவதிலே எளிதான காரியமாக முடியக்கூடிய காரியமாக மாறிவிடும். நல்லதே நினைத்து நல்லதே செய்து நல்லவனாக வாழுங்கள். நமக்கு அனைத்து நலன்களும் வளங்களும் இறைவன் அருள்வாராக.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*



## மெய்ப்பொருள் நாயனார் காட்டிய மெய்ப்பொருள்

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

மெய்ப்பொருள் நாயனார் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். இவரின் தனிச்சிறப்பு திருக்கோவிலூரின் அரசனாக வாழ்ந்ததாகும். ஓர் அரசர் நாயன்மார் எனப்போற்றப்படுவது தனிச்சிறப்பாகும். சிவவேடமே தனது அலங்காரமாகக் கொண்டிருந்தவர். சிவநாமத்தைத் தமது மூச்சாகக் கொண்டு வாழ்ந்தவர். சிவனடியார்களைப் போற்றிப் பூசித்து வாழ்ந்து வந்தவர். சிவஞானியாக, சிவநாமத்தைச் சொல்லி, சிவவேடம் தாங்கி வாழ்ந்துவந்தமையால் நாட்டையும் நாட்டு மக்களையும் கவனிக்காது இருந்ததில்லை. நாட்டை நல்லமுறையில் ஆட்சிசெய்து வந்துள்ளார். நாட்டு மக்கள் மீது மிகுந்த அன்பும் கருணையும் கொண்டிருந்தார். மக்களும் மன்னரைப் போற்றி வாழ்ந்து வந்துள்ளனர். மெய்பொருளாரின் புகழ் நாடெங்கிலும் பரவியிருந்தது.

**உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீஇருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது ஆனால்
அடியேன் உன்அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப்புரியாய் பொன்னம்பலத்து எம்முடியாமுதலே.**

என மாணிக்கவாசகர் இறைவனிடம் வேண்டுவது போல, மெய்ப்பொருளாரும் சிவனடியார்களோடு இருப்பதையே விரும்பியுள்ளார். சிவனடியார்களைப் போற்றுவது, சிவனடியார்களை வணங்கி அவர்களுக்கான பணிவிடைகளைச் செய்வதையே மெய்ப்பொருளார் தமது கடமையாகக் கொண்டிருந்தார்.

**நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார்.**

என்கிற சேக்கிழாரின் வரிகள் மெய்ப்பொருளார்க்கு அப்படியே

பொருந்தும். இறைவனது திருவடிகளை எப்பொழுதும் நினைக்கும் எண்ணத்தில் எவ்விதக் குறைவும் காட்டாதிருப்பவர் தொண்டர்கள் ஆவர். இத்தகு இலக்கணத்தைத் தமது வாழ்நாள் முழுதும் கடைப்பிடித்து மெய்ப்பொருளார் வாழ்ந்துவந்தார். சிவத்தொண்டராக வாழ்ந்தபோதும் தமது நாட்டு மக்களையும் காத்து நாட்டைக் காப்பதிலே முக்கியத்துவம் தந்தார். மெய்ப்பொருளார் நாட்டினை வென்றுவிடவில்லை. பலரும் பலமுறை தோற்றுப்போயினார். போர்செய்ய வந்தார் அனைவரும் தமது போர்ப்படைகள் மற்றும் தளவாடங்கள் அனைத்தையும் இழந்து, தோற்றுப்போயினர். இதனைச் சேக்கிழார் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

**இன்னவா றொழுகும் நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்**
**அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால் அமர்மேற் கொண்டு**
**பொன்னணி ஓடையானைப் பொருபரி காலாள் மற்றும்**
**பன்முறை இழந்து தோற்றும் பரிபவப் பட்டுப் போனான்.**

மெய்ப்பொருளாரின் சிவத்தொண்டு மிகவும் போற்றுதலுக்குரியது. அனைத்து சிவாலயங்களிலும் பூசைகள் தங்கள் தங்குதடையின்றி நடந்திட ஆவன செய்தார். ஆடல் பாடல் கொண்ட விழாக்கள் கோவில்களில் மிகச்சிறப்பாக நடைபெற்றன. கோவில்கள் மக்களுக்கான அனைத்துத் தேவைகளையும் பூர்த்திசெய்யும் இடங்களாக இருந்தன. சிவனடியார்களும் எவ்விதக் குறைவுமின்றி மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள். இதனைச் சேக்கிழார் கீழ்க்காணும் பாடலில் தெளிவுபடுத்துகின்றார்.

**மங்கையைப் பாகமாக உடையவர் மன்னுங்கோயில்**
**எங்கணும் பூசைநீடி ஏழிசைப்பாடல் ஆடல்**
**பொங்கிய சிறப்பின்மல்கப் போற்றுதல் புரிந்துவாழ்வார்**
**தங்கள் நாயகருக்கு அன்பர் தாள்அலால் சார்பொன்றில்லார்**

**தேடிய மாடுநீடு செல்வமும் தில்லைமன்றுள்**
**ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகுமென்று**
**நாடிய மனத்தினோடு நாயன்மார் அணைந்தபோது**
**கூடிய மகிழ்ச்சிபொங்கக் குறைவறக் கொடுத்து உவந்தார்.**

கோவில்களை வளப்படுத்துதல், தொடர்ந்து பூசைகள் நடைபெறுதல், அடியார்களை அரவணைத்தல், மக்களுக்கு எவ்விதக் குறைவும் வராமல் பார்த்துக் கொள்ளுதல், அறம் சார்ந்த ஆட்சி செய்தல் ஆகியவற்றில் அதிகக் கவனம் செலுத்திய மெய்ப்பொருளார், தமது செல்வம், தாம் ஈட்டிய பொருளனைத்தும் மக்களுக்கே அதாவது இறைவனின் அன்பர்களுக்கே என வாழ்ந்து வந்தார். தம்மை நாடிவந்த அனைவர்க்கும் குறைவின்றிக் கொடுத்து அவர்களது வாழ்வில் மகிழ்ச்சி பொங்க வாழ்ந்துவந்தார்.

பிறக்கின்ற போது யாரும் எதையும் எடுத்து வருவதில்லை. இங்கே இருப்பதைத்தான் வாழ்கின்றபோது எடுக்கிறார்கள். கண்டுபிடிக்கின்றார்கள். பயன்படுத்துகின்றார்கள். வாழ்வு முடிந்தபிறகு அனைத்தையும் விட்டுவிட்டுச் சென்றுவிடுகிறார்கள். இது என்றைக்கும் என்னுடையது என நினைக்க இடமில்லை. இக்கருத்தினை, பகவத்கீதை மிக நன்றாக விளக்கியுள்ளது. மெய்ப்பொருளாரின் வாழ்வும் பகவத்கீதையின் படிப்பினை ஒட்டியே உள்ளது. அரசின் வளங்கள், அரசர் ஈட்டிய அனைத்துச் செல்வங்களும் இறைவனின் அன்பர்களுக்கே அதாவது மக்களுக்கே என்கிற மெய்ப்பொருளை, மெய்ப்பொருள் நாயனார் உணர்த்தியுள்ளார். தனது வாழ்வு என்பது மக்களுக்காக வாழ்கின்ற வாழ்வு என்பதை மெய்ப்பொருளார் உணர்த்தியுள்ளார்.

இவ்வாறு சிவத்தொண்டனாக இருந்து. தெய்வீக அறவழியில் ஆட்சிசெய்து வந்த மெய்ப்பொருளாரை யாராலும் வெல்லமுடியவில்லை. பலரும் போரில் தோற்றனர். இவ்வாறே முத்தநாதன் என்கிற மன்னனும் பலமுறை போரிட்டுத் தோற்றான். போரில் வெல்லமுடியாது என உணர்ந்த முத்தநாதன் சூழ்ச்சியால் வெல்லலாம் எனத் தீர்மானித்தான். மெய்ப்பொருளார் சிவனடியார்களைச் சார்ந்து இருக்கின்றார். சிவனடியார்கள் மீது அளவற்ற அன்பும் கருணையும் கொண்டுள்ளார். சிவனடியார்கள் அறிவுறுத்தும் சிவதத்துவங்களைச் செவிமடுத்துக் கேட்கின்றார். சிவனடியார்களைச் சிவிகையின் மேல் அமர்த்தி, மெய்ப்பொருளார்

கீழே அமர்ந்து கொள்கின்றார். இதனை உணர்ந்த முத்தநாதன் சிவனடியார் போல் வேடமிட்டு அரண்மனைக்குச் சென்று, மெய்ப்பொருளார் அருகிலே அமர்ந்து கொன்றுவிடலாம் எனச் சூழ்ச்சி செய்கிறான். சிவத்தொண்டர் வேடம் பூணுகிறான். இதனைச் சேக்கிழார் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

மெய்யெலாம் நீறுபூசி வேணிகள் முடித்துக்கட்டி
கையினிற் படைகரந்த புத்தகக்கவளி ஏந்தி
மைபொதி விளக்கேஎன்ன மனத்தினுட் கருப்புவைத்துப்
பொய்தவ வேடங்கொண்டு புகுந்தனன் முத்தநாதன்

அரசன் முத்தநாதன் சிவனடியாராக பொய் வேடம் பூணுகிறான். உடம்பு முழுவதும் திருநீறு பூசிக்கொள்கிறான். தலையில் பொய்யான சடைகளைக் கட்டிக் கொள்கிறான். ஓலைச்சுவடிகள் கொண்ட பையினைச் கையில் எடுத்துக் கொள்கிறான். ஓலைச்சுவடிகளுக்கு நடுவே போரில் எதிரியைக் கொல்லப் பயன்படுத்தும் குத்துவாளினை மறைத்து வைத்துக் கொள்கிறான். மெய்ப்பொருளாரைக் கொல்ல வேண்டும் என்கிற தீய எண்ணத்தை மனதில் வைத்து அரண்மனையில் முத்தநாதன் புகுந்தான் எனச் சேக்கிழார் தெரிவித்துள்ளார். மைபொதி விளக்கே என்ன என்கிற உவமானத்தைச் சேக்கிழார் பயன்படுத்தியுள்ளார். மின்சாரம் இல்லாத வீடுகளில் கண்ணாடிச் சிமிழ் கொண்ட மண்ணெண்ணை விளக்குகள் பயன்படுத்தப்படுவதுண்டு. கண்ணாடிச் சிமிழில் சுடரில் கரும்புகை படியும். கரும்புகை படியப்படிய விளக்கு வெளிச்சம் குறையும். கரும்புகை நீங்கத் தினந்தோறும் கண்ணாடிச் சிமிழைத் துணிகொண்டு துடைப்பார்கள். புகை படிந்தால் வெளிச்சம் குறையும். மனதில் சூழ்ச்சி என்னும் கரும்புகை வைத்துக்கொண்டு பொய்தவ வேடம் கொண்டு முத்தநாதன் அரண்மனையில் புகுந்துள்ளான்.

பொய் வேடமிட்டு ஊரின் பல்வேறு அழகிய மாடவீதிகளைக் கடந்து அரண்மனையை வந்தடைந்த முத்தநாதனைக் காவலர் அனைவரும் சிவனடியார் என நினைத்து வணங்கி வழி கொடுத்தனர். கடையுடைக் காவலர் கைதொழுதேற நின்றே உடையர் தாமே வந்தார் உள்ளெழுந்

தருளும் என்ன எனச் சேக்கிழார் எழுதியுள்ளார். முத்தநாதன் அரண்மனையின் அனைத்து வாயில்களையும் கடந்து சென்றான். இறுதியாக மெய்ப்பொருளார் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் அறையை அடைந்தான். அறைக்காவலன் தத்தன் தடுத்தான். அரசர் ஓய்வில் இருக்கிறார். பிறகு வாருங்கள் அரசனைக் காணலாம் எனத் தத்தன் தெரிவிக்கிறான். யாரும் கூறாத மிக முக்கியமான சிவத்தத்துவத்தை யான் அறிந்து உம் அரசருக்குக் கூற வந்துள்ளேன். உடனே வழி விடு எனப் பொய் வேடம் கொண்ட முத்தநாதன் கூறுகின்றான். யான் அவற்குறுதி கூற நின்றிடு நீயும் என முத்தநாதன் தத்தனிடம் கூறி அவனைக் கடந்து அரசர் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்ற அறைக்குள் செல்கிறான். அரசர் உறங்கியிருக்க அரசியார் அருகே அமர்ந்திருப்பதை முத்தநாதன் காண்கிறான். முத்தநாதனைப் பார்த்த அரசியார் உறங்கியிருந்த அரசரை எழுப்பினார். எழுந்த அரசர் சிவனடியாரை மனமுருக வணங்கி நின்றார். சிவனடியாரான தாங்கள் இங்கு எழுந்தருளப் பெற்றதென்கொலோ என அரசர் கேட்கிறார். அரிதான சிவ ஆகமநூலின் தத்துவங்களை உமக்குக் கூற வந்துள்ளேன் எனப் பொய் வேட முத்தநாதன் அரசனிடம் கூறுகிறான். இதனைச் சேக்கிழார் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

**மங்கலம் பெருக மற்றென்வாழ்வு வந்தணைந்ததென்ன**
**இங்கெழுந் தருளப் பெற்றதென்கொலலோ? என்று கூற**
**உங்கள் நாயகனார் முன்னம் உரைத்த ஆகமநூல் மண்மேல்**
**எங்குமில்லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப என்றான்**

இந்த ஆகமநூலினை நான் உனக்கு விளக்கிச் சொல்லும் போது அரசியார் அருகில் இருக்கக் கூடாது எனச் சூழ்ச்சி செய்கிறான் முத்தநாதன். அவ்வாறே அரசியரும் அங்கிருந்து சென்றுவிடுகின்றார். அரசர் வேடதாரியைத் தவிசின் மேல் அமரவைத்துத் தான் தரையில் அமர்ந்து, சிவனடியாரை வணங்கி மண்ணில் எங்குமில்லாத சிவ ஆகம நூலின் தத்துவங்களை விளக்கி எனக்கு அருள் செய்க என மெய்ப்பொருளார் வேண்டினார். தரையில் அமர்ந்து குனிந்தபடியே

நெஞ்சுருக வணங்கியிருந்த அரசரை, தாம் ஓலைச்சுவடிப் பையில் மறைத்து வைத்திருந்த குத்துவாளை எடுத்து தாம் நினைத்தபடியே குத்தினான். அரசர் இரத்த வெள்ளத்தில் சார்ந்தார். சப்தம் கேட்ட வாயிற்காவலன் தத்தன் அறைக்குள் நுழைகிறான். தனது வாளைக்கொண்டு சிவனடியாரைத் தாக்க முற்படுகிறான். அரசன் தடுக்கிறார். இவர் நம்மவர் சிவனடியார் தாக்காதே எனத்தத்தனுக்குக் கட்டளையிடுகிறார். மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள். இச்சிவனடியாரை ஊரில் யாரும் தடுக்கா வண்ணம், தாக்காவண்ணம் பாதுகாப்பாக ஊருக்கு வெளியில் விட்டுவா எனக் கட்டளையிடுகிறார். அரண்மனையில் நடந்த விசயங்கள் மக்களுக்குத் தெரிகின்றது. பொய் வேடச் சிவனடியாரைக் கொன்றே தீருவோம் என்கிற முடிவில் மக்கள் சாலைகளில் திரண்டு நிற்கின்றனர். ஆனால் அரசன் கட்டளையிட்டதை மக்களிடம் தத்தன் சொல்லிச் சிவனடியாரை மிகப்பாதுகாப்புடன் ஊருக்கு வெளியிலே விட்டுவிட்டு வருகிறான். மெய்ப்பொருளார் தாக்கப்பட்டதைக் கீழ்க்காணும் பாடலில் சேக்கிழார் விளக்குகின்றார்.

**கைத்தலத்திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல்வைத்துப்**
**புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும்போதில்**
**பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்த அப்பரிசே செய்ய**
**மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் எனத்தொழுது வென்றார்**

பொய்வேடம் அணிந்து உயிர்பிரியும் அளவிற்குத் தாக்கியவர் சிவனடியாராக இருந்ததன் காரணமாக அவரின் உயிர் தப்பியது. தமக்குத் தீமை செய்தவர்க்கும் நன்மை செய் என்கிற மெய்ப்பொருளை உணர்த்தி இதற்கு உதாரணமாக இருந்தவர் மெய்ப்பொருள் நாயனார். இதனாலேயே மெய்ப்பொருளார்க்கு இறையருள் கிட்டியது.

பொய்வேடதாரி பாதுகாப்பாக ஊருக்கு வெளியே அனுப்பிவைக்கப்பட்டார் என்கிற செய்தியை வாய்மூலம் கேட்ட அரசர், தத்தனுக்கு நெஞ்சார நன்றி கூறினார். இத்தகு செயலை, உதவியை உன்னைப் போல் வேறுயார் எனக்குச் செய்வர் எனப் பாராட்டி அனைவரையும் அழைத்து விதியினாலே பரவிய திருநீற்றன்பு பாதுகாத்துய்ப்பீர் என்று சொல்லி இறைவனின் திருவடியை

அடைந்தார். இதனைச் சேக்கிழார் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

**அரசியல் ஆயத்தார்க்கும் அழிவுறும் காதலார்க்கும்**
**விரவிய செய்கைதன்னை விளம்புவார் விதியினாலே**
**பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர் என்று**
**புரவலர் மன்றுளாடும் பூங்கழல் சிந்தை செய்தார்**

தமக்குப் பிறகு ஆட்சிசெய்பவர்களும், வருத்தத்தில் இருக்கும் அரசியாரும் ஏனைய சுற்றத்தாரும் திருநீற்றின்மீது கொண்ட அன்பைப் பாதுகாத்து இன்புற்று வாழவேண்டும் என மெய்ப்பொருளார் இறைவன் பூங்கழல் சிந்தித்து, இறைவன் திருவடி அடைந்தார்.

மெய்த்தவ வேடமே மெய்ப்பொருளாகும். மெய்ப்பொருள் என்பது என்றைக்கும் நிலைத்திருக்கும் பொருள், செயல், சேவை, சாதனை அல்லது புகழ் என்பதாகும். இச்சிறப்பிற்கு மெய்த்தவ வேடம் பூண அவர் பணி என்றைக்கும் பேசப்படும். ஒருவரது அர்ப்பணிப்பில் உண்மை இருந்தால் அவரது புகழ் என்றும் நிலைத்திருக்கும். சேவகன் என்ற உண்மை வேடம் பூண்டு சேவையில் உண்மை இருப்பின் அச்சேவை வரலாற்றில் என்றும் நிலைத்திருக்கும். படிக்கின்ற மாணவனுக்கு, படிப்பு தவம். அத்தவத்தில் உண்மையாக இருக்கவேண்டும். மாணவன் என்பது புறத்தவம். படிப்பு என்பது அகத்தவம். அகத்தவத்திலும் புறத்தவத்திலும் உண்மை இருப்பின் அந்த மாணவனது படிப்பு என்றும் நிலைத்திருக்கும் மாணவனது பெயரும் என்றும் நிலைத்திருக்கும். மெய்த்தவவேடமே மெய்ப்பொருள் என்பது இத்தகு உதாரணங்களில் அறியமுடிகின்றது. இதனைப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பு தெய்வச் சேக்கிழார் மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

மெய்த்தவ வேடமே மெய்ப்பெருள் என்பது சிவத்தத்துவத்தை எந்நாளும் பின்பற்றி வாழ்வதாகும். சிவ சிவ என்றிடத் தீவினை வீழும், சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர், சிவ சிவ எண்ணச் சிவகதி தானே என்கிற திருமூலரின் வரிகள் சிவத்தத்துவ மெய்ப்பொருள் என்பதை உணர்த்துகின்றது.

தீமை செய்தார்க்கும் நன்மைசெய் என்பதை மெய்ப்பொருளாக மெய்ப்பொருள் நாயனார் உணர்த்துகிறார். இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்மை செய்துவிடம் என்கிற திருக்குறள் இங்கே நினைவிற்கு வருகின்றது. தாம் ஈட்டிய பொருள் தமக்கில்லை என்கிற நிலையாமைத் தத்துவத்தையும் மெய்ப்பொருள் நாயனார் புராணம் உணர்த்துகின்றது. வாழ்வின் மெய்ப்பொருளை உணர்த்தும் பெரியபுராணத்தைத் தொடர்ந்து பின்பற்றி இன்புறுவோமாக.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

**அருட்புலம்பல்**

பட்டினத்தார் இறைவன் தன்னை ஆட்கொண்டு அருளிய தன்மையைப் பலபடக் கூறி அவன் அருளித் தன்வடிவத்தைத் தனக்குக் காட்டிக் கள்ளத்தனமான ஐம்புலன்களையும் அவற்றால் உண்டாகும் தீமைகளையும் கூறிப் புலம்புகிறார். மேலும் தொடர்ந்து வரும் பிறவித்துயர் நீங்கக் காரணமான தன்மையைக் கூறுவதாகக் கீழ்வரும் கண்ணிகள் அமைந்துள்ளன. ஐங்கரனைத் தெண்டனிட்டேன் அருளடைய வேண்டுமென்று தயங்காமல் வந்(து)ஒருவன் தன்சொரூபம் காட்டிஎனை,

*கொள்ளைப் பிறப்(பு)அறுக்கக் கொண்டான் குருவடிவம்*
*கள்ளப் புலன்அறுக்கக் காரணமாய் வந்தானடி.*

இனி, யோகமுறை பற்றியும் ஆறு ஆதாரங்கள் பற்றியும் அவற்றால் உண்டாகும் ஒலிக்குறிப்புகள் ஐம்பத்தொன்றையும் பற்றிக் கூறுகிறார் பட்டினத்தார். திருமூலர் முதலான சித்தர்கள் இதனை விரிவாகப் பேசுகின்றனர். ஆதாரங்கள் 6.

1. மூலம் 2. தொப்புள் 3. மேல்வயிறு 4. நெஞ்சு 5. கழுத்து புருவநடு 6. டம்பம் (தற்பெருமை)

யோகமுறை என்பது பிராணவாயுவை (மூச்சுக்காற்றை) அடக்கப் பயிலும் பிராணாயாமம் பற்றிக் கூறுகிறார். இதனை வாசியோகம்

என்று சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். இப்படி வாசியோகம் பயின்றவரின் வாழ்நாள் அதாவது ஆயுள் நீடிக்கும் என்பர். இதனைச் சாகாக் காலை என்றும் கூறுவர். மூச்சுக் காற்றினை வெளிவிடாது அடக்குதலே பிராணாயாமம் எனப்படும்.

உடம்பின் உள்ளே உள்ள உயிர்க்காற்றே பிராணன் எனப்படும். அது பாம்பு வடிவில் மூலாதாரத்தில் இருக்கும். மூலாதாரம் என்பது இடைக்குக் கீழும் குதத்திற்கு (ஆசனவாய்) மேலும் இருக்கும் வெப்பமான குண்டலினியைக் குறிக்கும். இந்தக் குண்டலினி மேலெழுந்து முதுகுத் தண்டின் வழியாகச் சென்று மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைக் கடந்து தலை உச்சியை அடையும். அதன் பின் உண்டாகும் ஒலி அதிர்வுகளை ஒலியாகக் கொண்டு அவை ஐம்பத்தொன்று கணக்கிடுகின்றனர். 4-6-10-12-16-3 இவற்றின் கூட்டுத்தொகை 51 இதனையே ஐம்பத்தோர் அட்சரம் என்று கூறுகின்றனர். இந்த 51 ஒலி அதிர்வுகளையும் கடந்து சென்றபின் அருள்வெளி தோன்றும். இதனைத் தம்பலம் என்றும் சகஸ்தளம் என்றும் கூறுவர். இந்த ஆறு ஆதாரங்களையும் 51 எழுத்துக்களின் ஒலியதிர் வையும் கொண்ட என் உடலாகிய கோட்டையிலுள்ள குற்றங்கள் அனைத்தையும் நீக்கிடச் செய்தான்.

*ஆதாரம் ஓர்ஆறும் ஐம்பத்தோர் அட்சரமும்*
*சூதான கோட்டைஎல்லாம் சுட்டான் துரிசுஅறவே*

மிகவும் வேறுபாடுகளை உணடாக்குகின்ற தத்துவங்கள் பல அனைத்தும் தலைதெரியாமல் வெந்து போனது. தத்துவங்களின் எண்ணிக்கை 96 அவை யாவன

1.ஆன்ம தத்துவங்கள் 24 2.உடலின் வாசல்கள் 9 3.தாதுக்கள் 7 4.மண்டலங்கள் 3 5.குணங்கள் 3 6.மலங்கள் 3 7.வியாதிகள் 3 8. விகாரங்கள் 8 9.ஆதாரங்கள் 6 10.வாயுக்கள் 10 11.நாடிகள் 10 12.அவத்தைள் 5 13.ஐயுடம்புகள் 5 இந்தத் தத்துவங்கள் அனைத்தும் தலைதடுமாறிப் போயின.

*மெத்த விகாரம் விளைக்கும் பலபலவாம்*
*தத்துவங்கள் எல்லாம் தலைகெட்டு வெந்ததடி*

என்னுடன் பிறந்தார் அனைவரும் இறந்து போனார்கள். இப்பொழுது தான் தன்னந்தனியனாய் இருக்கின்றேன். இவ்வாறிருக்க என்னால் இயலாது.

*என்னோடு உடன்பிறந்தார் எல்லாரும் பட்டார்கள்*
*தன்னந் தனியே தனித்திருக்க மாட்டேனடி*

அனைவரும் இறந்தநிலை என்று மாறும். அவற்றைச் சொல்லிச் சொல்லியே அழுதால்தான் என்னுடைய துன்பம் ஆறும்.

*எல்லாரும் பட்டகளம் என்று தொலையுமடி*
*சொல்லி அழுதால் துயரம்எனக்கு ஆறுமடி*

மண் தொடங்கி வருகின்ற ஆகாயம் நெருப்பு நீர் காற்று எனவரும் ஐம் பூதங்கள் அனைத்தும் செயலற்றுப் போகக் கண்டேன். தலை முதல் தொடங்கி வரும் ஐந்து பொறிகளும் ஆற்றல் இழந்திடக் கண்டேன்.

*மண்முதலாம் ஐம்பூதம் மாண்டுவிழக் கண்டேண்டி*
*விண்முதலாம் ஐம்பொறிகள் வெந்துவிழக் கண்டேண்டி*

என்னைவிட்டு நீங்காத ஐம்புலன்களும் நீறாகி வெந்து போயின. சொல் முதலான ஐந்தறிவும் மாண்டு போகக் கண்டேன். (கண்டு கேட்டு உண்டு உயிர்த்தல் உணர்தல் ஆகியன ஐந்தறிவுகள்)

*நீங்காப் புலன்கள் ஐந்தும் நீறாக வெந்ததடி*
*வாக்காதி ஐவரையும் மாண்டுவிழக் கண்டேண்டி*

மணம் முதலான அந்தக்கரணங்களான அத்தனையும் கூட்டத்தோடு எரிந்து சாம்பலாகக் கண்டேன்.

*மனக்கரணம் அத்தனையும் வகைவகையே பட்டழிய*
*இனக்கரணத் தோடே எரிந்துவிழக் கண்டேண்டி*

தத்துவங்கள் 36 என்பர். அவை உலகின் தோற்றம் அமைப்பு ஆகியனவற்றை விளக்குவதாக அமையும். இவை பிரபஞ்சத்தின் மூலப்பொருள்கள். இவற்றை 24 ஏன்றும் 36 என்றும் 96 என்றும் பலவகையாகக் கூறுகின்றனர். சாங்கிய யோகம் 24 தத்துவங்களைக் குறிக்கின்றது. சைவநெறி 36 தத்துவங்களைக் குறிக்கின்றது.

***சிவதத்துவம் ஐந்து - வித்தியா தத்துவம் ஏழு - ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு***

***ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு. அவை***

சிவ தத்துவம் 5 - வித்தியா தத்துவம் 7 - ஆன்ம தத்துவம் 24 ஆன்மதத்துவத்தின் இருபத்து நான்கின் விளக்கம் மா பூதங்கள் ஐந்து - தன்மாத்திரைகள் ஐந்து - கன்மேந்திரியங்கள் ஐந்து - ஞானேந்திரியங்கள் ஐந்து - அந்தக்கரணங்கள் நான்கு ஆணவம் - கன்மம் - மாயை என்ற மும்மலங்களில் ஒன்று மாயை. அது பதி என்ற இறைவனால் இயக்கப்படும் போது இந்த 36 தத்துவங்களும் படிப்படியே தோன்றும். மாயா மலம் சுத்த மாயை அசுத்த மாயை பிரகிருதி மாயை என மூன்றாகப் பிரியும். அவை முறையே ஐந்து - ஏழு - இருபத்து நான்கு என 36 தத்துவங்களாகத் தோன்றும். சுத்த மாயையில் இருந்து தோன்றும் ஐந்தையும் சிவதத்துவம் என்பர். அசுத்த மாயையில் இருந்து தோன்றும் ஏழையும் வித்தியா தத்துவம் என்பர். பிரகிருதி மாயையில் இருந்து தோன்றும் இருபத்து நான்கையும் ஆன்ம தத்துவம் என்பர்.

**சிவதத்துவம் ஐந்தின் விளக்கம்**

நாதம் - தூய அறிவான பரம்பொருளின் முழுமையான நனவிலி நிலை. இதுவே பரசிவம் எனப்படும்.

விந்து - சக்தி - இயங்கும் கிரியா சக்தி. இந்த இயக்கத்தாலேயே சிவத்துடன் சேர்ந்து ஏனைய தத்துவங்களை உண்டாக்கும். இறைவனின் திருவருட் சக்தியின் நிலை இதுவே.

சாதாக்கியம் - சதாசிவனும் சிவசக்தியும் இணைவதால் செயலும் அறிவும் சம நிலையில் காணப்படும். இதன் மூலம் மற்ற தத்துவங்களின் தோற்றம் தூண்டப்படும்.

ஈசுரம் - மறைத்தற் சக்தியான மகேசுரன் செயலற்ற ஆன்மாக்களை மறைத்து உள்ளாக்கும் செயல். அதனிடையே இறையறிவும் இயங்குதல்

சுத்த வித்தை - ஆக்கல் - காத்தல் - அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் அடிப்படையான இறைத்தத்துவம். இந்த இறையறிவு முழுமையாகச் செயற்பட செயல் (கிரியா சக்தி) பின்னணியில் இயங்கும்.

**வித்தியா தத்துவம்**

அசுத்த மாயையில் இருந்து தோன்றிய செயலற்ற ஆன்மாக்களைச் செய்யச் செய்யும் கருவிகளே வித்தியா தத்துவங்கள்.

அவை - காலம் - நியதி - கலை - வித்தை - இராகம் - மாயம் ஆகிய இவற்றுடன் ஆன்மா(புருடன்) இவற்றுடன் ஒன்றாகி வித்தியா தத்துவம் ஏழு ஆகின்றது.

**ஆன்ம தத்துவம் 24**

இந்த இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களும் உலகத்திற்கும் உயிர்களுக்கும் அடிப்படை. சிவதத்துவத்தால் வித்தியா தத்துவம் தூண்டப்படும். ஆன்மா இயங்குவதற்கான கருவிகள் தரப்பட்டால் மட்டும் போதாது. அவ்விதம் இயக்கக் காரணமான பௌதிக உடலையும் அதைச் சார்ந்த பொறிகளும் மற்றும் ஒன்பது கருவிகளும் வேறு வேறு குழுக்களாகப் பிரிந்து ஆன்ம தத்துவத்தில் அடங்கும்.

***மா பூதங்கள் ஐந்து - நிலம் - காற்று - நீர் - நெருப்பு - ஆகாயம் தன் மாத்திரைகள் ஐந்து - சுவை - ஒளி - ஊறு (தொடுதல்) - ஓசை - நாற்றம் (மணம்)***

கன்மேந்திரியம் ஐந்து - பற்றுதல்(பாணி) பதித்தல் (பாதம்) படைத்தல் (உபத்தம்) வாக்கு - கழித்தல்(பாயு) மனித உடல் செய்யும் ஐந்தொழில்களும் கன்மேந்திரியங்களாகும். பற்றும் செயல் கைகளுக்கு உரியது. பதித்தல் அதாவது பாதத்தின் தொழில் கால்களுக்கு உரியது. படைத்தல் மூளைக்கு உரியது. வாக்கு நாவின் செயல். அங்கங்கள் அனைத்தும் கழித்தலைச் செய்யும். இவை ஐந்தும் ஆன்மா உடலில் இயங்க அவசியம் ஆகும்.

ஞானேந்திரியங்கள் ஐந்து - மெய் - வாய் - கண் - மூக்கு - செவி ஆகிய ஐம் பொறிகளும் ஒன்றோடொன்று இணைந்து செயலாற்றுவதாலேயே உயிர்கள் அறிவைப் பகுத்தறிந்து மேனிலையை அடைகின்றன.

அந்தக் கரணங்கள் நான்கு - மனம் - புத்தி - அகங்காரம் - சித்தம், இவை நான்கும் சித்தத்தைப் பிரகிருதி என்று அழைக்கும். ஆகவே

சித்தத்தை முதலாகக் கொண்ட 24 தத்துவங்களும் ஒன்று சேரும் போதே பிற தத்துவங்களுடன் இணைந்து இப்பௌதிக உலகில் செயலாற்றத் தொடங்குகின்றது.

ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றையும் முப்பத்தாறு தத்துவங்களையும் மூலாதாரம் சுவாதிஸ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் அவை அழியும்படியாக அவற்றை வேரோடு அறுத்தான்.

மேலே கூறிய கருத்துக்களை உள்ளடக்கிக் கீழ்வரும் பாடல் வரிகள் விளக்குகின்றன.

*ஆத்துமத் தத்துவங்கள் அடுக்குஅழிய வெந்ததடி*
*போற்றும் வகை எப்படியோ போதம் இழந்தானை*
*வித்தியா தத்துவங்கள் வெந்துவிழக் கண்டேண்டி*
*சுத்தவித்தை ஐந்தினையும் சுட்டான் துரி(சு) அறவே*
*மூன்று வகைக்கிளையும் முப்பத்தா(று) அறுவரையும்*
*கான்றுவிழச் சுட்டுக் கருவேர் அறுத்தாண்டி*

எனக்கு ஞானோபதேசம் செய்கின்ற குருவாகி வந்தானோ? என்பால் உள்ள குற்றங்களை நீக்கிட வந்தானோ? அதற்காக அவனே உருவெடுத்து என் உருவை மாற்றிட வந்தானோ? (மருதவாணர் ஒரு குழந்தையாகிப் பட்டினத்தார் முன் தோன்றிய வரலாறு)

எனக்கு வரும் கேடு இன்னதென்று நான் அறியவில்லை. ஆதலால் கெட்ட அறிவு தோன்றாமல் காத்திடு. உலக வாழ்வில் துன்பம் வரும் என்று அறியாமல் இருந்தேன். அதனால் பதியாகிய இறைவன் என்னை ஆண்டு கொண்டான்.

*குருவாகி வந்தானோ குலம் அறுக்க வந்தானோ*
*உருவாகி வந்தானோ உருஅழிக்க வந்தானோ*
*கேடுவரும் என்றறியேன் கெடுமதிகள் தோன்றாமல்*
*பாடுவரும் என்றறியேன் பதியாண்டு இருந்தேண்டி*

இவ்வுலகில் தோன்றிய அனைவரும் பட்ட இடம் இன்னதென்று நான் அறியேன். பொல்லாங்கைப் போக்கும் பொறியற்ற தன்மையைக் கண்டேன்.

*எல்லாரும் பட்டகளம் இன்னஇடம் நானறியேன்*
*பொல்லாங்கு தீர்க்கும் பொறியிலியைக் கண்டேண்டி*

என் உடலாகிய அதாவது உள்ளமாகிய கோட்டைக்குள் தீயவைகள் அனைத்தும் ஒரு சேரமடிந்தன. அந்தக் கோட்டைக்குள் இருந்த ஆறறிவும் அழிந்தது. கற்கோட்டை போலிருந்த இந்த உடல் கரியாகிப் போனது. உயிர் போனபின் உறவினர் கூடி இவ்வுடலுக்கு எரியூட்டிடுவர். இறுதியில் மிஞ்சுவது ஒருபிடி சாம்பல் என்ற கருத்து இங்கு சுட்டிக் காட்டப் பெறுகிறது.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### வாய்மை

மெய்ம்மையின் தன்மை

**(உண்மையின் தன்மை)**

**1. வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல.**

வாய்மை எனப்படுவது யாதெனின் - உண்மை எனக்கருதப் பெறுவது எதுவென்றால்; யாதொன்றும் - எந்த ஒன்றையும்; தீமை இலாத சொலல் - தீமை பயக்காதவாறு சொற்களைச் சொல்லுதல்.

பிறருக்குத் தீமை பயக்காதவாறு எந்த ஒரு சொல்லையும் சொல்லுதலே உண்மை எனக் கருதப்பெறும்.

**2.பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.**

பொய்ம்மையும் - பொய்ச் சொற்களும்; வாய்மை இடத்த - உண்மைச் சொற்களின் இடத்தில் எண்ணப்படும்; புரைதீர்ந்த - குற்றம் நீங்கிய; நன்மை பயக்கும் எனின் - நன்மைகளைத் தருமானால்.

குற்றம் இல்லாத நன்மைகளைத் தருமானால் பொய் கூட உண்மையின் இடத்தில் வைத்து எண்ணப்படும்.

**3.தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்.**

தன்நெஞ்சு அறிவது - தனது உள்ளம் அறிந்து; ப்ொய்யற்க - பொய்

சொல்லக் கூடாது; பொய்த்தபின் - பொய் சொன்ன பிறகு; தன்நெஞ்சே - தனது உள்ளமே; தன்னைச் சுடும் - பொய் சொன்னவனைத் துன்புறுத்தும்.

ஒருவன் தனது உள்ளம் அறிந்து பொய் சொல்லக் கூடாது. அவ்வாறு பொய் சொன்ன பிறகு அதனை அறிந்த அவனுடைய உள்ளமே அவனைத் துன்புறுத்தும்.

**4. உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்.**

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் - மனமறிந்து பொய் சொல்லாமல் வாழ்ந்தால்; உலகத்தார் - இவ்வுலகத்தவர்; உள்ளத்துள் எல்லாம் உளன் - எல்லாருடைய உள்ளத்துள்ளும் உள்ளவனாவான்.

மனமறிந்து பொய்சொல்லாமல் வாழ்பவனை இவ்வுலகத்தார் எல்லோரும் அவர்களின் உள்ளத்தில் வைத்துப் போற்றுவார்கள்.

**5.மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானம்செய் வாரின் தலை.**

மனத்தொடு - தன் மனதோடு பொருந்தி; வாய்மை மொழியின் - உண்மை பேசினால்; தவத்தொடு - தவம் செய்வதோடு; தானம் செய்வாரின் தலை - தானம் செய்பவரை விட மேன்மையானது.

ஒருவன் தன் மனதோடு பொருந்தி உண்மை பேசினால் தவமும் தானமும் செய்பவரை விட மேன்மையான வனாகக் கருதப்படுவான்.

**6.பொய்யாமை அன்ன புகழாஇல்லை எய்யாமை**
**எல்லா அறமும் தரும்.**

பொய்யாமை அன்ன புகழ்இல்லை - பொய் சொல்லா திருத்தலைப் போன்ற புகழ் இல்லையாகும்; எய்யாமை - எய்தற்கரிய; எல்லா அறமும் தரும் - எல்லா அறங்களையும் அது தரும்.

பொய் சொல்லா திருத்தலைப் போன்ற புகழ்ச் செயல் வேறெதுவும் இல்லை. அது எய்தற்கரிய எல்லா அறங்களையும் தரும்.

**7.பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று.**

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் - பொய் சொல்லாதிருத்தலைப்

பொய்யாதிருத்தலைச் செய்தால்; அறம்பிற - பிற அறங்களை; செய்யாமை நன்று செய்யாதிருத்தல் நன்று.

பொய் சொல்லாதிருந்தால் பிற அறங்களைச் செய்யாதிருந்தாலும் நன்றாகும்.

**8. புறந்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை**
**வாய்மையான் காணப் படும்.**

புறந்தூய்மை - உடம்பின் தூய்மை; நீரான் அமையும் - நீரினால் உண்டாகும்; அகம் தூய்மை - உள்ளத்தின் தூய்மை; வாய்மையின் காணப்படும் - சொல்லும் உண்மையால் அறியப்படும்.

உடம்பின் தூய்மை நீரினால் உண்டாகும்; அதுபோல உள்ளத்தின் தூய்மை சொல்லும் உண்மையால் அறியப்படும்.

**9. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

எல்லா விளக்கும் - புற இருளை விலக்கும் எல்லா வகையான விளக்குகளும்; விளக்கல்ல - விளக்கு ஆகாது; சான்றோர்க்கு - உயர்ந்தோர்க்கு; பொய்யா விளக்கே விளக்கு - பொய்யாமை என்னும் விளக்கே மன இருளை நீக்கும் விளக்கு ஆகும்.

புற இருளை விலக்கும் எல்லா விளக்குகளும் விளக்கு ஆகா; உயர்ந்தோருக்குப் பொய்யாமை என்னும் விளக்கே மன இருளை நீக்கும் விளக்கு ஆகும்.

**10. யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற.**

யாம்மெய்யாக் கண்டவற்றுள் - யாம் உண்மையானதாகக் கண்டறிந்தவற்றுள்; இல்லை - இல்லை; எனைத் தொன்றும் - எந்த ஒன்றும்; வாய்மையின் நல்லபிற - பொய் சொல்லாதிருத்தலை விடப் பிற நல்லவற்றை.

யாம் உண்மையானதாகக் கண்டவற்றுள் பொய் சொல்லாதிருத்தலை விட எந்த ஒன்றும் நல்லது இல்லை.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

17.03.2018 - 23.3.2018 கோவிலூர் ஆண்டவர் உடற்கல்வி மற்றும் விளையாட்டு அறிவியல் கல்லூரியின் நாட்டு நலப்பணித்திட்டத்தின் 7 நாள் சிறப்பு முகாம் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் தொடங்கி வைக்கப்பெற்றது. கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் வரவேற்றார். தமிழ்நாடு உடற்கல்வி மற்றும் விளையாட்டுப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் வைத்தியநாதன், கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். காணல் அறக்கட்டளை, கோவிலூர் கண் மருதுதுவமனை, சென்னை ப்ரண்ட்லைன் மருத்துவமனை கோவிலூர் மடாலயத்துடன் இணைந்து இலவச கண்சிகிச்சை முகாம் நடைபெற்றது. கண் மருத்துவர்கள் கிருஷ்ணன் மற்றும் ஜெயவேல் தலைமையில் நடைபெற்ற இம்முகாமில் கண்கள் சோதிக்கப்பெற்றது. இலசவமாக மருந்துகளும், ஆலோசனைகளும் வழங்கப்பெற்றன. சுமார் 250பேர் பயன்பெற்றனர். காரைக்குடி அரசு மருத்துவமனை இரத்தவங்கியுடன் இணைந்து இரத்ததான முகாம் நடைபெற்றது. அரசு இரத்த வங்கிப் பொறுப்பு அலுவலர் டாக்டர். அருள்தாஸ் தலைமையில் இரத்த வங்கி அலுவலர்கள் இரத்தங்களை மாணவர்களிடமிருந்து சேகரித்தனர். மாணவ மாணவியர் 70 பேர் இரத்ததானம் செய்தனர். இரத்தவங்கி அலுவலர் பேசுகையில் நாங்கள் பல இடங்களில் இரத்ததானம் செய்யுமாறு கேட்டுப்பெறுகிறோம். ஆனால் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் தாமாக முன்வந்து இரத்ததானம் செய்கின்றன. இது மகிழ்வைத் தருகிறது. கலைக்கல்லூரி, பாலிடெக்னிக் கல்லூரி, உடற்கல்விக் கல்லூரி மூலம் ஆண்டுக்கு 200 யூனிட் இரத்தத்தைத் தானமாகப் பெறுகிறோம். இது போன்றவைகளால் தான் காரைக்குடி இரத்தவங்கியிலிருந்து சிவகங்கை அரசு மருத்துவமனைக்கு இரத்தம் அனுப்பி வருகிறோம். இதற்கு உதவி செய்த கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகளுக்கு நன்றியைத் தெரிவிப்பதாகக் கூறினார். நாட்டு நலப்பணித்திட்ட அலுவலர் பேரா. சாத்தாகுட்டி நன்றி கூறினார். முகாம்களுக்கான ஏற்பாடுகளைப் போராசிரியர்கள் டாக்டர். சரவணன், ஆனந்தராஜ்,

ரஞ்சித், விமலாதேவி ஆகியோர் செய்திருந்தனர். பி.பி.எட்., முதலாம் ஆண்டு மாணவர் வெங்கடேஷ் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, மாயாண்டி, திருமதி. மணிமொழிமோகன், மணிமொழிமுருகன் உடற்பயிற்சிக் கல்லூரி அலுவலக மேலாளர் முத்தப்பன் பங்கு பெற்றனர்.

24.03.2018 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் மங்கையர்க்கரசியார் பற்றிப் பேராசிரியர். டாக்டர். மு.வள்ளியம்மை சொற்பொழிவாற்றினார்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

காலம் சென்றது. ராஜசேகரன் தனது அருமருந்தன்ன குமாரன் குலோத்துங்கனுக்குப் பட்டங் கட்டிவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழல் சேர்ந்தான். குலோத்துங்க பாண்டியன் ஒவ்வொரு நாளும் சோமசுந்தரப் பெருமானைப் பக்தியுடன் வழிபடும் நியமத்தை மேற்கொண்டான்.

பாண்டியன் குலோத்துங்கன் அரசு புரிந்து வருகின்ற நாளிலே திருப்புத்தூரிலிருந்து ஒரு பிராமணன் தனது மனைவியுடனும் கைக்குழந்தையுடனும் வந்து கொண்டிருந்தான். தனது மாமன் வீடு மதுரையிலே இருந்ததால் காட்டு வழியே வந்து கொண்டிருந்தான். வருகின்ற வழியிலே அவனது மனைவிக்குத் தாகம் கண்டது. ஆதலால் தனது மனைவியைக் குழந்தையுடன் பெரிய ஆலமரத்தின் நிழலிலே அமர்த்திவிட்டுத் தண்ணீரைத் தேடிச் சென்றான். இதற்கிடையே அந்த அம்மாள் குழந்தையைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு அயர்ச்சியினால் படுத்துக்கொண்டாள். ஆலமரத்தின் அடர்ந்த இலைகளுக்கு நடுவே கூர்மையான அம்பு ஒன்று சிக்கிக் கிடந்தது. என்றோ ஒருநாள் யாரோ ஒரு வேடனால் எய்யப்பட்ட அம்புஅது. காற்று வீசியது. அதனால் மரத்தின் கிளைகளும், இலைகளும் அசைந்தாடின. அசைவினால் அந்தப் பழைய அம்பு கீழே விழுந்தது. விழுந்த அம்பு மல்லாந்து படுத்திருந்த பார்ப்பனியின் வயிற்றிலே பாய்ந்து ஊடுருவியது. விதிப்பயன் காரணமாகப் பார்ப்பனி இறந்து போனாள்.

அந்த நேரம் பார்த்து இயல்பாக வேட்டையாட வந்த வேடன் ஒருவனும் வில்லும் கையுமாக மரத்தின் அப்புறத்திலே நின்றுகொண்டிருந்தான். பிராமணன் தண்ணீர் கொண்டு திரும்பிவிட்டான். பக்கத்தில் குழந்தை கிடக்க இரத்த வெள்ளத்திலே தனது மனைவி இறந்து கிடப்பதைக் கண்டான். அவள் வயிற்றிலே அம்பு பாய்ந்துள்ளதையும் பார்த்தான். கலங்கிய அறிவால் மனம் வதங்கினான்.

பின்னர் இந்த ஸ்திரீ ஹத்தியைச் செய்தது யார்? என்று ஆராய்பவனாகி ஆலமரத்தைச் சுற்றி வந்து பார்த்தான். பார்த்து வருகையில் வில்லுடன் வேடன் தென்பட்டான். அந்த வேடன்தான் அம்பெய்தித் தன் மனைவியைக் கொன்றுவிட்டிருக்க வேண்டும் என்று பார்ப்பனன் நினைத்தான். ஏ வேடனே ! என் மனைவியைக் கொலை செய்தவன் நீயே பாண்டிய மன்னன்மேல் ஆணை என்று கூறி முழங்கி வேடனைத் தன்னுடன் இழுத்துச் சென்றான். இறந்த தன் மனைவியைத் தோளிலே தூக்கிக் கொண்டான். குழந்தையைத் தன் இடுப்பிலே அணைத்துக்கொண்டான். அழுத கண்ணும் விம்மிய நெஞ்சமும் கொண்டு வேகமாக நடந்து மதுரையைச் சேர்ந்தான்.

குலோத்துங்க பாண்டியனது அரண்மனையை அடைந்து வாசலில் தனது இறந்த மனைவியைக் கிடத்தி முறையிட்டு அழுது நின்றான். இந்தப் பொல்லாத வேடன் என் மனைவியைக் கொலை செய்து விட்டானே என்று ஏங்கிக் கதறினான். வாயில் காப்பவர்கள் உடனே விரைந்து சென்று மன்னனிடம் சொல்லினர். நிலைகுலைந்த மன்னன் மிகவும் பயந்து தன்னையே வெறுத்துக்கொண்டு வெளி வந்தான்.

அந்தணனது அவல நிலையைக்கண்ட அரசனின் மனம் பெரிதும் இரங்கியது. வந்து குறை கேட்டான் வேந்தன். புகழ்ப்பாண்டிய ! மனைவிக்காகத் தண்ணீர் கொண்டு வருவதற்காகச் சென்றபோது இவ்வேடன் அவளைக் கொன்று விட்டான் என்று குற்றம் சாட்டினான் பார்ப்பனன். வேடன் வேந்தனை நோக்கினான். அரசர் பெருமானே! இளைப்பாறுவதற்காகத்தான் நான் மரத்தடியில் நின்றகொண்டிருந்தேன், நான் கொலை செய்தவன் அல்ல கொலை செய்தவனையும் பார்க்கவில்லை; நான் ஒரு பாவமும் அறியாதவன் என்று பணிந்து கெஞ்சினான். உடனே மந்திரிகள், அப்படியானால்

அம்மாளின் உடலிலே அம்பு பாய்ந்தது எப்படி? என்று கேட்டனர். அதற்கு வேடன் ஐயன்மீர் ! இதைப்பற்றி உண்மையாக எனக் கொன்றும் தெரியாது என்றான். மந்திரிமார்களின் யோசனையின்படி மன்னன் வேடனைப் பல் வகையான தண்டனைக்கு உட்படுத்தினான். வேடன் உறுதியான உள்ளத்தோடு ஒரே மாதிரியான பதிலையே சொல்லிக் கொண்டிருந்தான். அரசனும் பலபடியாக ஆராய்ந்து பார்த்தான். ஏதும் புலப்படவில்லை. இந்த விஷயம் மனித ஆராய்ச்சிக்கு உட்பட்டதன்று; தெய்வம்தான் தெளிவாக்க வேண்டும் என்று கருதினான். ஆதலால் பார்ப்பனனை அவனது மனைவிக்கு ஈமக்கடன் செய்யுமாறு அனுப்பிவிட்டு வேடனைச் சிறையிலிட்டான்.

ஈமக்கடன் முடித்துத் திரும்பிய பார்ப்பனனை அரண்மனை வாசலிலே இருக்கச் செய்துவிட்டுக் குலசேகர பாண்டியன் திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமான் முன்பு நின்று, பெருமானே! தெளியாத மனத்தோடு வந்துள்ளேன். பார்ப்பனியைக் கொன்றது வேடனா? அன்றி வேறு யாரேனுமா? காரணம் தெரியவில்லை. எம் பெருமானே அருள் வேண்டும் என்று வணங்கி விண்ணப்பித்துக் கொண்டான். அதுசமயம் ஆகாசத்திலிருந்து, பாண்டிய ! கேள். இத்திருநகரின் வெளியே செட்டித் தெருவிலுள்ள ஒரு வீட்டிலே இன்றிரவு விவாகம் நடக்கும். பிராமணனையும் அழைத்துக் கொண்டு அங்கே செல். அவ்விடத்திலே உனது மனம் தெளிவடையுமாறு செய்வோம் என்று ஆகாசவாணி எழுந்தது. அமைதி அடைந்த உள்ளத்தோடு பாண்டியன் திரும்பினான்.

மாலை நேரம் சென்றதும் மாறு வேஷம் கொண்ட மன்னன் தன்னோடு பார்ப்பனனையும் அழைத்துக் கொண்டு விவாக வீட்டுக்குச் சென்று ஒரு புறமாக அமர்ந்திருந்தான். மன்னவனுக்கும் மறையவனுக்கும் பக்கத்திலே இரண்டு பேர்கள் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் யமதூதர்கள். கடவுள் அருளால் அவர்கள் பேசியது இந்த இரண்டு பேருக்கு மட்டும் கேட்டது. இப்பொழுது இங்கேயே மணமகன் உயிரை வாங்கி வரும்படி நமது யமதர்ம ராஜா ஆணையிட்டிருக்கிறாரே, அவரது ஆணையை எப்படி நிறைவேற்றுவது? மணமகன் ஆரோக்கியமாக இருக்கிறானே, என்ன செய்வது என்று ஒரு தூதன் சொன்னான். அதற்கு மற்றொரு தூதன்

இதில் என்ன கஷ்டம் அருக்கிறது? இன்று பகலிலே, ஆலமர இலைகளில் சிக்கியிருந்த பழைய அம்பைக் காற்றினால் விழச்செய்து கீழே கிடந்த பார்ப்பனியைக் கொன்று அவள் உயிரை வாங்க வில்லையா? அதைப் போலவே இப்பொழுதும் செய்துவிடுவோம். இவ்வீட்டிற்கு வெளியே ஒரு மாடு நின்று கொண்டிருக்கிறது. கெட்டிமேளம் கொட்டி ஆரவாரம் செய்யும் நேரத்திலே அந்த மாட்டைமருண்டு ஓடச்செய்வோம். மாட்டின் மூலமாகவே மணமகனின் உயிரை வாங்குவோம் என்று யுக்தி சொன்னான். வேந்தன் வேதியனைப் பார்த்தான், விவரம் தெளிந்த வேதியனும் வேந்தனுடன் இருந்து மேலை விளைவுகள் தெரிய அமர்ந்திருந்தான். மணவீட்டிலே ஏகப்பட்ட ஆரவாரம். நல்ல நிமித்தம் நெருங்கியதும் மங்கையர் மங்கலம் முழங்கினர்; பலவாத்தியங்கள் முழங்கின. பேரொலி கேட்டுப் பசுமாடு வெருண்டது. தானும் அலறிக்கொண்டு கட்டியகயிற்றை அறுத்துக் கொண்டது. உள்ளே ஓடிச் சென்று விட்டது. மணமகன் பிணமகனானான்; மணப்பறையே பிணப்பறை ஆயிற்று. மங்கையர் வாழ்த்து – அழுகையாயிற்று. என்ன செய்யலாம்? விதியே வென்றது !

இந்த நிகழ்ச்சியைக் கண்ட பார்ப்பனன் மிக மிக வருந்தினான்; குற்றமற்ற வேடனைத் துன்பத்துக்குள்ளாக்கியதை எண்ணி எண்ணி மனம் புழுங்கினான். பின்னர் மன்னனோடு அரண்மனைக்குத் திரும்பினான். அரண்மனை சேர்ந்த பாண்டியன் நடந்த எல்லாவற்றையும் தனது மந்திரிகளிடமும் மற்றவர்களிடமும் கூறினான்.

குலோத்துங்க பாண்டியன் பின்பு அந்தணனைப் பார்த்து, நீ வேறொரு விவாகம் செய்துகொள் என்று சொல்லி நிரம்பப் பொருள் கொடுத்து அனுப்பினான். சிறை கிடந்த வேடனையும் உடனடியாக விடுவித்து அவனிடன் மன்னிப்புக் கோரினான். அவனுக்கும் வேண்டியது வழங்கிச் செல்லச் செய்தான்.

பாண்டியன் பின்னர் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானை வணங்கி, பெருமானே! எளியேன் பொருட்டு தேவரீர் பழியஞ்சு நாதராய் இருந்தீர் ! என்று போற்றி விசேஷ பூஜை செய்தான்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**